உ
சிவமயம்.

ஸ்ரீமத்பரமஹம்ஸ
பரிவ்ராஜ்காசார்ய வர்ய
ஸ்வயம்ப்ரகாச
பிர்மேந்த்ர ஸரஸ்வதி
அவதூத சுவாமிகளின்
பேரில் நிஜானந்தம் இயற்றிய

# அவதூத வெண்பா மாலை.



கும்பகோணம் சில்க் ஹவுஸ்,
வி. ராமய்யர் & கம்பெனியாரால்
பிரசுரம் செய்யப்பட்டது.

கும்பகோணம் சுதேசி பிரஸ்

இதன் விலை அணா 6] [போஸ்டேஜ் வேறு

# ஆலங்குடி பாக்குவெட்டி.



இந்த பாக்குவெட்டியானது எஃகினால் செய்யப்பட்டது. இது நமது ஜில்லா ஆலங்குடி என்றஊரில் கைதேர்ந்த வேலைக்காரர்களால் செய்யப்படுகின்றது. ஆலங்குடி பாக்கு வெட்டி என்று தமிழ் தேசத்தார்களுக்குத் தெரியாமலிராது. மேலும், ஆலங்குடி பாக்குவெட்டியின் பெயர் வைத்து அநேக மட்டப் பாக்குவெட்டிகளையும் விற்று வருகிறார்கள். ஆதலால், நமது பாக்குவெட்டியில் ஒன்று தருவித்துப் பார்த்தால் உண்மை விளங்கும்.

பெரிய பாக்குவெட்டி 1-க்கு ரூ. 0—8—0

ஷை 2ந் தரம் 1-க்கு ரூ 0—6—0

படத்தில் கண்ட பித்தளை பாக்குவெட்டி 1-க்கு ரூ.

மொத்தமாய் வாங்குவோர்கள் அரையணா ஸ்டாம்புடன் எழுதிக் கேட்கவும். உங்களுக்கு வேண்டிய பட்டாடைகளுக்கு நமக்கு எழுதவும்.

வி. ருமய்யர் அண்டு கம்பெனி

சில்க் அவுஸ்,

கும்பகோணம்.

உ

சிவமயம்.

ஸ்ரீமத்பரமஹம்ஸ

பரிவ்ராஜகாசார்ய வர்ய

ஸ்வயம்ப்ரகாச

பிர்மேந்த்ர ஸரஸ்வதி

அவதூத சுவாமிகளின்

# அவதூத

# வெண்பா மாலை.


கும்பகோணம் சில்க் ஹவுஸ்,

வி. ருமய்யர் & கம்பெனியாரால்

பிரசுரம் செய்யப்பட்டது.

1922



ஸ்ரீ நிஜானந்த ப்ரஹ்மேந்த்ர
ஸரஸ்வதி.

1-5



ஸ்ரீ நிஜானந்த ப்ரஹ்மேந்த்ர
ஸரஸ்வதி.

சிவமயம்.

# குருபக்தி விளக்கம்.

ஸ்ரீ அகண்ட பரிபூரண சச்சிதானந்த திவ்ய தேஜோ ரூபியாயும், பிரக்ஞானகனராயும், ஸஜாதீய, விஜாதீய, ஸ்வகதபேதாஹிதராயும், ஸர்வஜீவதயாபரராயும் விளங்கும் பரமேசுவரர், ஆன்மாக்களின்மீது வைத்த பரமகருணையினால், அவர்களுக்கு வேண்டிய போகபோக்கியங்களைப் பூரணமாகக் கொடுத்தும் பின்னர் பிரமரகீடந்யாயம்போலத் தன்னுருவாக்கிக்கொள்ளுதற் பொருட்டு சங்கற்பமாத்திரத்தானே யுண்டாக்கிய வுலகின்கண்ணுள்ள ஜீவவர்க்கங்கள் யாவற்றுள்ளும், மனுஷ்ய வர்க்கமே மிக்கச் சிறப்புடைத்தென்பது யாவரும் நன்குணர்ந்த விஷயமே. அத்தகைய வெய்தற்கரிய மானிடப் பிறப்பெய்திய வொவ்வொருவரும் தத்தமக்குக் கிடைத்திருக்கும் மானிடஜென்மத்தை ஸபலமாக்குதற் பொருட்டு, ஜீவகாருண்யம், ஈசுவரபக்தி, பாசவைராக்கியம், பிரமக்ஞானம், என்பனவற்றை கிரமகிரமமாய்ப் பெறவேண்டும். அதுவும், ஸ்ரீ சத்குருநாதனருளினாலேயே

பெறப்படுகிறது. இன்னேறென்ருகும். ஈசுவர பக்தியைக்காட்டிலும் குருபக்தியென்ன விசேஷமுள்ளதாவெனின், ஆம், விசேஷமுள்ளதுதான். குருவினுற் காட்டப்பட்டவரே யீசுவரர். அவ்வீசுவரபக்தியுங் குருபக்தி யின்றியுண்டாவதில்லையாதலின் குருபக்தி விசேஷந்தான்.

குரு என்ற சப்தத்திற்கு அர்த்தம் கு:- என்ருல் அஞ்ஞானந்தகாரம், ரு:- என்ருல் அதை நிவர்த்திக்கும் ஞானப்பிரகாசம். ஆதலின் குருவென்ற சப்த மாத்திரத்தில் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும் ஞான ரூபம் என்பது சித்திக்கிறது. அன்றியும், " இந்தத் துன்பத்திற்கேதுவாகிய வுடம்புண்டாதற் கேது தந்தையாதலின் அவரைத் தந்தை யெனத்தக்கவர்களாகிய மகான்கள் சொல்வார்கள். நாசமின்றிய அகண்ட ஸ்வரூபத்தை நம்முள் உணருமாறு தந்தவராகிய குருமூர்த்தியையே ஆன்ரேர் தந்தை யென்று சொல்வார்கள் என்றும், குருவே பிர்மா, குருவே விஷ்ணு, குருவே மகாதேவர், குருவே சாக்ஷாத் பரப்பிர்ம ஸ்வரூபம். அந்தக் குருவின் பொருட்டு நமஸ்காரம் என்றும், உள்ள முதுமொழிகளும். ஈசுவரன் கோபிக்கில் குரு ரக்ஷிப்பார் குரவர் கோபிக்கில் ஒருவராலும் நிவர்த்தியில்லையென்னும் சுருதியும் பிரமாணமாம். ஞாலத்தையுண்ட மகாவிஷ்ணு குருமூர்த்தி

ஸ்வரூபரா யுள்ள ஞானியர்கள் வேண்டுவனவற்றை சிரமிசைகொண்டு வந்தளிப்பர். ஆலமுண்டு உலகத்தை ரக்ஷித்த சிவபெருமான் அவர்கள் பின்னரே திரிந்துக்கொண்டிருப்பார். பூவுலக மன்னரும் தேவர்களும் அவர்களது பாததூளிக்கு திசைதிசை தோறும் நின்று நமஸ்கரிப்பார்கள். பிர்மதேவர் குருமூர்த்திஸ்வரூபமாயுள்ள ஞானியர்களின் உபயபாதாரவிந்தங்களையுந் தனது சிரசிற் சூட்டவேண்டுமென்று பிரார்த்திப்பாரெனின் அவர்கள் மகிமை நம்மாற் கூறப்பாற்றோ பரமேசுவரனுங்கூட வுலகில் மானிடர்க் கனுக்கிரகம் செய்ய வாங்காங்கு குருமூர்த்திஸ்வரூபமாய் வந்தேயனுக்கிரஹித்திருக்கிறார் என்பதும், குருவினதுமேன்மையை யுணர்த்தற்பொருட்டு நமது திருச்சிற்றம்பலநாதராகியசிவகாமசுந்தரியை தமது வாமபாகத்துடைய நடராஜப்பெருமானும், பெத்தான்சாம்பானுக்கு முக்தி கொடுத்தற் பொருட்டுக் கொற்றவன்குடி உமாபதி சிவாச்சார்யஸ்வாமிகளுக்குக் கைச்சீட்டுத் தமதழகிய திருக்கரத்தாலெழுதியனுப்பியருளினரென்பது முலகமுணர்ந்ததே. உலககுருமார்களாகிய யாக்ஞவல்கியர் விசுவாமித்திரர், வசிஷ்டர், சக்தி, பராசர், வியாசர், சுகர், கௌடபாதாச்சார்யர், கோவிந்தபகவத்பாதாச்சார்யர், சங்கராச்சார்யர், பத்மபாதர் ஹஸ்தாமலகர், தோடகாச்சார்யர், வார்த்திகாச்சார்யர், மாணிக்கவாசகப்பெருமான், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள் திரு

ஞானசம்பந்தர், ஆள்வாராதியர், ராமாநுஜ. மாத்வ, வல்லபாச்சார்யர் முதலிய முந்தியயுகத்தவர்களும் கலி யுகத்தவர்களுமாய் ஆயிரக் கணக்கான வருடங்கள் உலகையாக்ஷிசெய்த, ஹரிச்சந்திரர், தசரதர், ஜனகர் முதலிய சக்கரவர்த்தியர்கட்குக் குருமார்களாயிருந்து உலகத்தையே ரக்ஷித்துவந்ததும், சேரசோழபாண்டி யர்கட்குக் குருமூர்த்திகளாயிருந்து நீதி வழுவாது தெய்வீகத் தன்மையோடும் அரசுபுரியச் செய்து ரக்ஷி த்து வந்ததும், புராணாதிப் பிரசித்தமே.

ஆதலின், அந்தந்த யுகங்களிலுமிருந்த சக்கர வர்த்திகளும், பிரஜைகளும் நன்மார்க்கம் மோக்ஷ முதலியவைகளையும், அடைந்தது குருபக்தியாலேயே யென்பது வெள்ளிடைமலைபோலத் தெள்ளிதிற்றெரி யக் கிடக்கின்றது. சுருதியிலுங் கர்மத்தாற் சம்பா திக்கக் கூடிய சொர்க்காதி போகங்கள் சாசுவதமான வைகளாவென்று நன்கு விசாரித்து அவைகள் புண் ணிய முடிந்தவுடன் நீங்கக் கூடியவைகளென்றும், மீண்டும் பூவுலகையடைந்து புண்ணியம் ஸம்பாதித் தாற் கிடைக்கக்கூடியவையாயும், அசாசுவதமாயிருப் பதாலும், இதனாற் பிறப்பிறப்புச் சக்கரத்தினின்றும் மாறுதலில்லையாதலாலும் துக்கநிவர்த்தியுமாகிறதில்லை யென்றுணர்ந்து அநித்திய போகத்தில் விவேகியான வன் வெறுப்புற்று சாசுவதமான சுக ஸ்வரூபமாகிய மோக்ஷத்தில் விருப்பங் கொள்ளவேண்டும். ஒன்றி

ஞற் செய்யத்தக்கதல்லாத மோக்ஷமானது யாகாதி கிருதுகளா லடையப்படுவதில்லை. அதனை யறிதற் பொருட்டு அதிகாரியானவன் குருவினிடம் கையிலுபகார பதார்த்தத்துடன் செல்லவேண்டும். குருவும் ச்ரோத்திரியர் அதாவது சாஸ்திர ஞான சம்பன்னரும்; பிர்மநிஷ்டருமா யிருக்கவேண்டு மென்றதனுற் கேவலம் சாஸ்திரஞானம் மாத்திரமுடையவர்களாய் ஸ்வானுபவமின்றி பிறர்கேட்கவே போதிப்பதல்லாது சும்மாவிருந்தருள் பொருந்திடாப்பேதை நானேயென்ற தன்மையோடும், பரோபதேச பண்டிதர்களாய் தம்முள்ளிருக்குமாசைக் களவின்றியவராய், சிஷ்யர்களின் பொருளையபகரிப்பதிற் சமர்த்தர்களாய், சிஷ்யர்களின் இதயவிருளைப்போக்கத் தாம் காடாந்தகார நிறைந்த விரவுபோன்ற வுளத்தினராய், சாஸ்திரங்கற்பதும் பிறர் மெச்சப் பேசுவதுமே பரமபுருஷார்த்தமென்றெண்ணுபவராய் தம்மிடங் கற்போருக்கும் அத்தகைய கொள்கையையே பரவச்செய்பவராய் கற்றவாறு தமதனுபவத்திற் பொருந்தவே காந்தமடைந்து நிதித்தியாசன முதலியவற்றைச் சொப்பனத்துங் கருதாதவரை விலக்கி, ஏனெனில் சுவானுபவமின்றியவர் தமுபதேசம் கேட்கும்போது மாத்திரம் யேதோ ருசிக்கிறதுபோலிருக்குமே தவிர அந்தரங்கமாக அவைகள் மனதிற் பதியா. பிரசங்க முடிவில் இவை யெல்லாம் பணத்திற்காகத் தானே யென்ற ஒரே வார்த்தை

யில் நிவர்த்தியாகி விடுகின்றன. ஆகையாலத்தகையர் உலக வுபகாரிகளாகாற்களென்றும் சுவானுபூதிமான் களேதான் போதித்தற்குரியார் சாக்ஷாத் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்திஸ்வரூபம்என்றும், சுருதி நன்குவிளக்குகிறது அப்படிப்பட்ட மகான்களைத் தான்காண்பது அரிதினு மரிது என்று சாஸ்திரங்கள் கோஷிக்கின்றன. ஜென ன மரண விஷயமாய், இவைகள் சகிக்கமுடியாத துக் கத்தை விளைப்பவைகள், யானேதும் பிறப்பஞ்சேனிற ப்பதனுக்கேன் கடவேன் என்றும், அஞ்யாசேன மா ணம் என்றும், இறப்போடு பிறப்பையுன்னிலிருவிழி கள் துயிலுறவேன்றும், கருப்பையூர் வாராமற்கா வென்றும், இன்னும் பலவாறாக வான்றோர்கள் ஒரு வராலாவது நிந்தியாதிருக்கப்படவில்லை. ஈசுவர ஸா ன்னித்தியத்தை முற்றுமடைந்த பெரியோர்கள் அனை வரும் ஜனன மரண மென்னுற் றலை நடுக்குற்றிருக்கி றார்களென்பது அம் மகான்களின் திருவாக்காகிய நூல்களே நன்கு விளக்குகின்றன. கற்றதுங்கேட்ட துந்தானேயேதுக்காக கடமென்றுசூட்டேதற்கோ; அல்ல ஆதலின் கற்றவாறு அனுபவம் செய்து சாந்தர்களாய் மைத்திரிகருணை முதிதையுபேக்ஷை யென்னுங்குணங் களுடன், தாம் அந்தக்கரணதாபமின்றி நித்தியானந்த பரிதர்களாய், எல்லாக் கவலையும் விட்டின்புற்றிருப்ப துவே சொல்லாறு முக்திச் சுகம் என்றபடி யிருந்து தம்மைச் சார்ந்தோர்கட்கும் அத்தகைய குணங்களை

யே யனுக்கிரகம் செய்கிறவர்களே மகான்கள். சுமார் இருநூறு வருடங்களுக்கு முன்னர் ஸ்ரீ ஸதாசிவப் பிர மேந்த்ர ஸரஸ்வதிகள் என்னும் திருநாமம் வாய்ந்த மகான் ஒருவரிருந்தார்கள். அவர்கள் அணிமாதியஷ்டைசுவரியங்களையும் பிரம சாக்ஷாத்காரத்தையுமுடையவர்கள். அவதூதரா யெங்கும் சஞ்சரிப்பவர்கள் புதுக்கோட்டை மகாராஜாவுக்கு அனுக்கிரகம் செய்து தக்ஷிணாமூர்த்தியை யுபாசிக்கும்படி யோர்விக்கிரகமூர்த்தியும் அனுக்கிரகித்து இன்றும் அது புதுக்கோட்டை அரண்மனையிற் பூசிக்கப்பட்டு வருகிறது அவர்களின் திவ்ய திருமேனியினது சமாதி மூன்றிடத்திலிருப்பதாகச் சில சரித்திரமூலம் தெரிகிறது அதில் ஒன்று கருரையடுத்த ஆறுவது மைலிலுள்ள நெரூர் என்னுமிடத்திற் காவேரிக் கரையிலிருக்கிறது. இச் சமாதியும் சுவாமிகளது ஆக்ஞையின்படி புதுக்கோட்டை நரேசரால் திருப்பணி செய்யப்பட்டு இன்றைக்கும் புதுக்கோட்டை சமஸ்தானத்திலிருந்தே பூஜாநைவேத்தியாதிகளும் நடந்து வருகிறது. இஷ்டகார்ய சித்தியை விரும்பும் ஜனங்களும் பெரிய மகான்களுங் கூட அந்த நெரூர் அதிஷ்டானத்தைத் தெரிசியாதாரில்லை ஸ்வாமிகளும், சித்தாந்த கல்பவல்லி, சிவயோகப்பிரதீபிகா, சிவபக்திகல்பலதிகா, ஆக்யாஷஷ்டி, ஆத்மவித்யாவிலாஸம், பிர்மசூத்ர விர்த்தி, யோரசூத்ரவிர்த்தி அனேக கீர்த்தனங்களும், பிறவும் திருவாய்மலர்ந்

துள்ளார்கள். அவர்களது அற்புத சரிதங்கள்பலவுள. ஆதி சங்கராவதாரமாகிய ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகளது 33 வது பட்டத்தவர்களும், ஸ்ரீசிருங்கேரி சாரதா பீடாலங்கிருத ஆச்சார்யாவர்களும் திருவாங்கூர்சமஸ்தானம் காலட்டியில் ஸ்ரீ ஆதி சங்கர மூர்த்திகளின் மூர்த்திப் பிரதிஷ்டை செய்தவர்களும், அநேக அலௌகிக சாமர்த்தியங்கள் உலகர் காணும்படி தோற்றி வைத்தவர்களுமான ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாச்சார்ய ஸச்சிதானந்த சிவாபி நவநரஸிம்ம பாரதி ஜகத்குரு சங்கராசார்யஸ்வாமிகள் காலட்டியில் பிரதிஷ்டை செய்து திரும்புங்கால் நெரூரில் ஸ்ரீ ஸதாசிவேந்த்ரசரஸ்வதிகளது அதிஷ்டானத்தில் விஜயமாகி மூன்று தினங்களிருந்து அதிஷ்டான மூர்த்திகளின்மேரில் ஸதாசிவேந்த்ர ஸ்துதி யென்னும் ஓர் பிரபந்தம் இயற்றியுள்ளார்கள் அதில் "சப்தங்களினாலும், அர்த்தங்களினாலும் விசேஷ ஞானத்தைப் பெற்றவர்களாகிய லோகர்கள் உலகத்தின்கண் யதேஷ்டமாய் இஷ்டம்போல் வசிக்கிறார்கள். ஆனால் ஸதாசிவேந்த்ரயதிராஜரோ தங்கள் போன்று நிஷ்டையோடு கூடினவர்கள். அதாவது ஸ்வானுபூதியோடு கூடினவர்கள். தங்களை விட வேறு ஒருவரையும் கண்டதுமில்லைக் கேட்டதுமில்லை" என்று திருவாய்மலர்ந்திருக்கிறார்கள். நாரத பரிவ்ராஜ கோபநிஷத்தில் பிரதிபாதித்திருக்கின்ற, சுவேதகேது, ரிபு, நிதாக, ரிஷப,

தூர்வாஸ, ஸம்வர்த்தக, தத்தாத்திரேய, ரைவதகாதிகள் போன்று சுரோத்திரியப் பிர்மநிஷ்டராயும் அவதூதா சிரமம் பூண்டவர்களுமான, சாஸ்திரங்களிற் கூறியலக்ஷணங்களுக்கு லக்ஷியரூபமாய் சேலம் ஜில்லா நாமக்கல் தாலூகா சேந்தமங்கலம் மலையிலிருக்கிற குகை மடத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாச்சார்யவர்ய ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச பிர்மேந்திர ஸரஸ்வதி அவதூதஸ்வாமிகள் தம்மை அடைந்தோரது அஞ்ஞான அந்தகாரத்தைப் போக்கும் ஞானசூரியனாகவும், கருதிவந்தோர்களது இஷ்டகாரியங்களை நிறைவேற்றுவதில் சாக்ஷாத் ஸ்ரீ சிவபெருமானாகவும், தாபத்திரயாக்கினியாற்றபிக்கப்பட்டு வாடும் அதிகாரிக குபரம சீதளத் தன்மையோடுங்கூடிய ஆனந்தாமிர்த சாகரமாகவுமிருந்து விளங்குகின்றார்கள் சுரோத்திரியத்தன்மையும், அகத்துறவும் புறத்துறவும், அபரோக்ஷ பிர்ம ஸாக்ஷாத்காரமும் உள்ள இம்மகாத்மா போன்று எவ்விடத்தும் காண்பதரிது மகான்கள் இத்தன்மையோடிருக்கிறார்களென்றறிதற் கரிதாய் மௌனமாய்ப் பித்தர்கள் போன்று மிருப்பார்கள் என்பதும் யதார்த்தம் ஆனால், அத்தகையர்களால் தமது சந்தேக விபரீதங்களைப் போக்கிக்கொண்டு பிர்ம சாக்ஷாத்கார ஞானமடைய விரும்பும் ஜிஞ்ஞாசுகள் தம்மிஷ்டம் போன்ற பயன்பெறுதல் சிரமசாத்தியமானதால், அப்படியின்றி அதிகாரிகளின் பக்குவத்துக் கேற்றவாறு

போதித்தும், சனகாதியர்க்கு ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி போன்று விளங்கும் இம்மகா புருஷரின் தரிசனம் கிடைக்கப் பெற்றவரே தன்னியர்கள். அவர்கள் ஜென்மமே மானிட யாக்கையைப்பெற்று பயனடைந்த தென்னலாம் தாமின்புறுவதுலகின்புறக்கண்டு காமுறுவர் கற்றறிந்தோர், என்றபடி இம்மகாத்மா போன்ற மகான்களது தரிசனங்கிடைத்தல் துர்லபமாதலின் விருப்பமுடைய மெய்யன்பர்கள் சென்று தெரிசித்து இகபர சாதனங்களைப் பெறவேண்டுமென்பதே கருத்து. ஸ்வாமிகளும் தமது இருபத்தேழாவது வயதிலிருந்தே துரியாதீத ஆச்ரமமெனும் அவதூதாசிரமம் வகித்து காசி, பத்திரிநாராயணம், பத்ரிகேதாரம், கெங்கோத்ரி முதலிய புண்ய க்ஷேத்ராடனங்கள் பன்முறையுஞ்செய்து ஆங்காங்கு பக்தர்கட்கு வேண்டிய வனுக்கிரகமும் புரிந்து தற்காலம் க்ஷேத்ராடனமின்றி சாஸ்திரங்களில் அவதூதர்களின் லக்ஷணம் சொல்லியிருப்பதில் சந்தேகமுடையார்கட்கு நேரிற் கண்டே சந்தேக நிவர்த்தி செய்துகொள்ளட்டுமென்று தெரிவித்து சாஸ்திரத்தையும் நம்பும்படி செய்வது போன்று அனுக்கிரக மூர்த்தியாயிருந்து வருகிறார்கள்.

ஸ்ரீமான் ஸ்வாமி
நிஜானந்த ப்ரஹ்மேந்திர
ஸரஸ்வதி.

உ

ஓம் தத்ஸத் ॥

ப்ரஹ்மைவ ஸத்யம் ॥

ஶ்ரீ ஸத்குருப்யோ நம: ॥

ஶ்ரீ ஸத்குரு சரணாரவிந்தாப்யாம் நம: ॥

# ஶ்ரீநித்யானந்த குருஸ்துதி: ॥



பராத்பரப்ரஹ்மரூபம் ஸச்சிதானந்தலக்ஷணம் ।
நாதபிந்துகலாதீதம் நித்யானந்த குரும் பஜே ॥ ௧ ॥

நிர்குணம் நிர்மலம் ஶாந்தம் நிராகாரம் நிரஞ்சனம் ।
நிராலம்பம் ஜகத்பூஜ்யம் நித்யானந்த குரும் பஜே ॥

ஸ்வானுபூத்யானந்தம் க்ருபாபூர்ணம் ஜகத்பதிம் ।
கலிஷ்வஜனோத்தாரம் நித்யானந்த குரும் பஜே ॥ ௩ ॥

ஏஷணாத்ரயவித்வம்ஸம் த்ரிகுணாவஸ்தவர்ஜிதம் ।
ஸர்வதேவம் ஸர்வமயம் நித்யானந்த குரும் பஜே ॥ ௪ ॥

ஸர்வகர்த்ருத்வபோக்த்ருத்வ நியந்த்ருத்வவிவர்ஜிதம் ।
ஸகலாகமஸம்வேத்யம் நித்யானந்த குரும் பஜே ॥ ௫ ॥

ஸ்ருஷ்டிஸ்திதிலயாதாரம் குணாகுணவிவர்ஜிதம் ।
ஸர்வவேதாந்தஸம்பூர்ணம் நித்யானந்த குரும் பஜே ॥ ௬ ॥

നിത്യാനന്ദം നിർവ്വികാരം ജ്ഞാനഭാവാനുബോധകം ।
സദാലംബം നിത്യതൃപ്തം നിത്യാനന്ദഗുരും ഭജേ ॥
സംസാരസാഗരോത്താരം യോഗിഹൃത്പദ്മമന്ദിരം ।
മഹാഭാസം ശാന്തചിത്തം നിത്യാനന്ദഗുരും ഭജേ ॥
പരം ജ്യോതിഃ സ്വസ്വരൂപം സർവ്വസാക്ഷിസ്വരൂ-
[പിണം ।
സർവ്വകാര്യസമുത്സാഹം നിത്യാനന്ദഗുരും ഭജേ ॥
നിർവ്വാണസുഖദം നിത്യം നിർദ്വന്ദ്വം നിരുപദ്രവം
ഭക്താനാം മോക്ഷദം ദാന്തം നിത്യാനന്ദഗുരും ഭജേ ॥
അച്യുതം മഹാത്മാനം മുനിയോഗീശസേവിതം ।
സന്മുനീന്ദ്രശിരോരത്നം നിത്യാനന്ദഗുരും ഭജേ ॥
ഏതത്സ്തോത്രമഹാരത്നം യഃ പഠേച്ഛൃണുയാദപി ।
തസ്യ പുംസഃ പുനർജ്ജന്മ ന വിദ്യേതൈവ നിശ്ച-
[യാത് ॥൧൨॥

ഇതി ശ്രീമന്നിത്യാനന്ദഗുരുസ്തുതിഃ
സംപൂർണ്ണാ ॥

---



உ

ஓம்தத்ஸத்

"ஸ்ரீ பரமாத்மநே நம:"

---

ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாச்சார்யவர்ய
ஸ்ரீ மத்ஸ்வயம்பிரகாச பிர்மேந்திர ஸரஸ்வதீ

# அவதூத ஸ்வாமிகளின்

மேற்பாடிய

## விருத்தங்கள் 10.

---

ஓங்காரப் பொருளாகி யண்டாண்டங்க
    ளுதித்தொடுங்கு நிலையாகி யுருவிலாதாய்
நீங்காத சத்தியமாய்ச் சிவமதாகி
    நித்தியா னந்தமாய் நிமலமாகி
பாங்கான விந்திர ஸரஸ்வதிமரபிற்
    பரிவுடனே வெழுந்தருளி யடியேன்றன்னை
யேங்காத வண்ணமருட் செய்துவாண்ட
    வெழிற்சுயம் பிரகாசக் கருணைத்தேவே. 1

நித்தியமாய் நிராமயமாய் நினைவிலாதாய்
நிறைந்தெங்கும் பூரணமாய் நின்றதாகி
யத்துவிதப் பொருளாகி யகண்டமாகி
யகிலாண்ட கோடியா யதீதமாகி
யெத்திசையும் புகழிந்திர சாஸ்வதிமாபி
லென்றுயர்பட் டிடமானிடச் சட்டைசாற்றி
சித்தமு வந்தெழுந்தினியாண் டிங்குமெங்குஞ்
சிறக்குஞ்சுயம் பிரகாசக் கருணைத்தேவே. 2

ஒன்றாகிப் பலவாகி யுபயமாகி
யுயிராகி யுணர்வாகி யுலகமெங்கும்
நின்றாடு மனந்தவித சத்தியாகி
நீணிலத்திற் காண்பவர்கள் பவங்களெல்லாஞ்
சென்றேக விந்திரசாஸ் வதிமாபிற்
சேயகன்ற தாய்போலச் சிறியேனைத்தேடி [ட
தொன்றுதொட் டெனைச்சூழும் பவமகற்றியாண்
துய்யசுயம் பிரகாசக் கருணைத்தேவே. 3

ஆதியா யந்தமாய் நடுவுமாகி
யருமறையின் சிறப்பொருளா யசலமாகி
பேதியா மறைமுனிவ ருள்ளந்தன்னிற்
பிறங்குதுரீ யாதீதப் பொருளுமாகி
கோதிலா விந்திரசாஸ் வதிமாபிற்
கொடியவினைதீர்த் தடியேனை யெழுந்தாண்டு
நீதியைத் தரித்தபரம் பொருளே யெல்லாம்
நிறைந்தசுயம் பிரகாசக் கருணைத்தேவே. 4

நான்யாவன் பந்தபாசங்கள் யாது
நானா பேதங்களாஞ் சகங்களேதென்
கோன்யாவன் பிறப்பிறப்பு வந்ததேதுக்
கொடியதென வுருகாத போதுஞ்சான்றோர்
தான்புகழு மிந்திரசரஸ் வதிமாயிற்
றமியேனை யாளவெழுந்தென் முடியின்மீதிற்
றேன்பொழியு மலர்ப்பதத்தைத் தாக்கித்துயர்
தீர்த்தசுயம் பிரகாசக் கருணைத்தேவே. 5

தரணிமுதல் வானாதி யீறாய்த்தோற்றித்
தழைத்தொடுங்கும் பூதங்க ளாந்[illegible]மல்லைக்
கரணமோர் நான்கல்லைக் குணமூன் றல்லைக்
கண்டிடும் பொறிபுலன்க ளலவென்றெல்லாஞ்
சரணடையப்பெரு மிந்திரசரஸ் வதிமாயிற்
சாந்தவருட் குன்றாயெழுந் திங்குநாடி
திரணமதி லுஞ்சிறியனெனை யறிவுநீயென்
றிசைத்தசுயம் பிரகாசக் கருணைத்தேவே. 6

அலைபெருகுங் கடலதனிற் றுரும்பதென்ன
வலைப்பிர பஞ்சமதி லந்தோவந்தோ
நிலைகுலைந்து வறிவிழந்து பித்தனைப்போல்
நெஞ்சுதடு மாறிநிற்கு மந்தநேரங்
கலைபயிலு மிந்திரசரஸ் வதிமாயிற்
களிப்பெய்தி யெழுந்தருளிக் கருணையாலென்
துலையாத பவமதனை யகற்றியெங்குந்
துலங்குஞ்சுயம் பிரகாசக் கருணைத்தேவே. 7

அண்டர்களு முனிவர்களு மறைகளுமற்
றரனயனு முரகரியுஞ் சித்தராதி
கண்டறிய வொண்ணாத கர்த்தனேயிக்
கசடனையுங் கரைசேர்க்கக் கருத்திலுன்னி
யெண்டிசையும் புகழிந்திரசரஸ் வதிமாபி
லிலகுகுரு பரம்பரையி லெழுந்தருளியேயென்
பண்டையுறு வினையதனைத் துகளாக்கியாண்ட
பரஞ்சுயம் பிரகாசக் கருணைத்தேவே. 8

வானாகி மண்ணாகித் தீநீராகி
வளியாகிச் சரமசர மாகியென்றன்
ஊனாகி யுயிராகி யுயிரினுள்ளே
யொளிருபர மாத்மாவாய் மாபுக்கெல்லாங்
கோனாகு மிந்திரசரஸ் வதிமாபிற் [கொண்டு
கொடியரினுங் கொடியனெனைக் குணமாய்க்
தானாக வெழுந்தருட்செய் தாண்டுமிக்கத்
தழைத்தசுயம் பிரகாசக் கருணைத்தேவே. 9

சீர்பெருகு மணிக்குன்றே தேவதேவே
செஞ்சுடரே தீஞ்சுவையே தெவிட்டாவின்பே
கார்பெருகு மனமுடைய வெனையுமந்தோ
கதிர்பெருகச் செயக்கருதிக் கருணையானல்
லோர்பெருகு மிந்திரசரஸ் வதிமாபி
லொளிபெருக வருளுருவா யெழுந்தெனையித்
தார்பெருகு மாந்தர்புகழ்ந் திடவாண்டெங்குந்
தரித்தசுயம் பிரகாசக் கருணைத்தேவே. 10



உ

சிவமயம்.

ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்ய வர்ய ஸ்வயம்
ப்ரகாச பிர்மேந்த்ரஸரஸ்வதி அவதூதசுவாமிகளின்

பேரிலியற்றிய

# அவதூத வெண்பாமாலை.



## மங்களாசரணம்.

---

ஹம்ஸமது நீர்களைந்துண் ணுவின்பால் போற்பரம
ஹம்ஸாவ தூத வருளிறைக்கு—நம்பணியாம்
வெள்ளைப்பா மாலை விளம்பவே ஞானமயத்
துள்ளு துண்டிவேழந் துணை.

ஆனை முகனை யறுமுகனை யம்பிகையை
மானைக் கரத்தனைப்பா மாமாதை—ஞானகுருத
தத்தாத்தி ரேயசங்க ராரியனைப் போற்றி செய்தேன்
அத்தனவ தூத ரருட்கு.

புத்தி விராகம் புகழாறு சாதனசம்
பத்தி முமுக்ஷுத்வம் பற்றிய—சித்தத்து
மாண்பரவ தூதவெண்பா மாலைக் குரியராய்க்
காண்பர் நிஜரூபங் காண்.

# நூல்.

வேதங் களுக்கெட்டா மெய்ப்பொருளே தாரணியென்
ஏதங் கெடுத்தாள வெண்ணியே-போதகுரு
வாகிவார ணாசிதனில் வந்த வவதூதர்
சோகமறம் பொற்று டிணை. 1

வெண்டிங்கள் வானிரவி வெள்ளி வியாழனெலாம்
பொன்றும் புறவிருளை யேபோக்கும் தண்ணளிசே
ரொங்க ளவதூத ரெற்குரைத்த வோர்மொழியாற்
பொங்கு மகவிருளும் போம். 2

மைத்திரி காருண்ய மாமுதி தையுபேக்ஷை
மெய்த்திருவாய் மேவு மவதூதர்-கைத்தலத்தா
லஞ்சலென்று சொல்லி யடியென் முடிசேர்த்துத்
தஞ்ச மெனக் களித்தார். 3

பிறவியொழிந் தான்மசுகம் பெற்றார்க டங்கூட்
டறவே யுன்க்குறவென் றோதும்-துறவி
லரிய வவதூத வண்ணலையே யென்று
முரியமன மேயுற வென்றோர். 4

தேசுருவே ஞான தினகரனே தீயமனத்
தாசறுக்கு முண்மை யவதூத-வீசுதிரைக்
காருண்ய மாகடலின் கைக்குறியைக் கண்டார்க்கே
நேருமவ தூத நிலை. 5

# அவதூத லக்ஷணம்.



வேதாந்த தத்துவத்தை நன்குணர்ந்த வேதியர்
போதாந்த முக்திசுகம் புக்கவே—நாதன் [கள்
அவதூத வர்த்த மறைந்தவட சொல்லை
நவதமி ழிற்சொல்வே ஞன். 6

ஆசையற்றுப் பாசமற்று றாதிமத் திமத் யாந்தமெ
தேசுறு நின்மல தேகியாய்—மாசற்ற [லாந்
வானந்தந் தன்னி லநவரத முஞ்சுகித்த
லான அகர-லக்ஷணம். 7

வாசனையெ லாமொழித்து வாக்கின் றொழிறானும்
பேசு நிராமயத்தின் பேறாகி—தேசமதில்
வர்த்தமா னப்பொருளில் வர்த்தித்த லென்றுரைத்தா
னத்தன் வகர-லக்ஷணம். 8

தூளிநிறை காத்திரமுந் தூசற் றொளிர்கின்ற
நீளிதயஞ் சுத்த நிராமயமாய்ச்—சூழிடமாம்
தாரணைத்தி யானமின்றித் தானா யிருத்தலென்று
ஞரணான்-தூ கார லக்ஷணம். 9

தத்துவத்தைத் தன்றன் றனிச்சித்தத் தேதரித்து
ஒத்தசிந்தைச் சேஷ்டை யொழித்துமே—னித்தந்
தமசமகங் காரந் தனையுங் கடித
லையுந் தகர-லக்ஷணம். 10

## வேறு

---

இந்நான் கெழுத்தி னிலக்ஷணத்தின் லக்ஷியமாம்
மன்ன ரவதூதர் வார்கழல்கள்—நன்னயமாய்
வேதன் முதன்மூவர் வேதமுதற் சாஸ்திரங்க
ளோது மறிந்தத னுண்மை. 11

அவதூதத் தேவே யருண்ஞான மூர்த்தி
யுவமான மற்ற வுணர்வே—புவிமீதி
லென்னை யெனக்களித்த வீசரின் மெய்வடிவ
மென்னையீ டேற்றவந்த தே. 12

அரனே யரியே யயனே யறிவே
பரனே குகனே பதியே—குரவா
சிரமே பணிய நினையே தினமே
கரவா தவதூத கா. 13

பரமஹம்ஸ ரான பரிவ்ராஜா சார்ய
அர[illegible] மவதூத வண்ணல்—சரணமலர்
கோணா மனத்திற் குருவென்னும் பாவனையாற்
காணாத கண்ணென்ன கண். 14

மன்றுடை யான்வேதன் மாலென்னு மிம்மூவ
ரொன்றித் திரண்ட வுருவாகு—மென்றும்
புவியிலவ தூதர் புரியுமுப தேசஞ்
செவியேநீ கேட்டுத் தெளி. 15

மோகந் தனைக்கெடுக்கும் மோக்ஷந் தனைக்கொடுக்கு
மாகந் தனைநம்பா தாக்குவிக்குந்—தேகந்தா
னுள்ளளவும் முக்திசுக முற்றிடவே செய்விக்கும்
வள்ள லவதூதர் வாக்கு. 16

தவமுயல் வோர்க்கிரங்கித் தங்குருவி லீச
னவனி யவதூத ராகிச்—சிவவுருவ
மாயே விளங்கு மருட்குருவின் செஞ்சரணம்
வாயேநீ யெப்போதும் வாழ்த்து. 17

பிறவிக் கடனீந்தப் பேர்நாவ மாகி
மறநீங்கப் புண்ணியமாய் வந்த—விறையாந்
தினமே யவதூதர் செய்கழற்கால் போற்று
மனமே யுனக்கென்ன மாண்பு. 18

காரணமில் காரியமில் லாவாறு போலவகங்
காரமின்றித் துக்கங் கலவாதால்—காரணமாம்
மூலவகங் கார மொழியென் றவதூதர்
சீல முடன்சொன்னார் தேர்ந்து. 19

## ஆதாரங்களில் அவதூதர் பாவனை.

எண்ணீ ருயிர்சே ரிதழ்க ணிறைவிசுத்தி
யொண்கமலத் துள்ளே யவதூதக்—கண்ணுதலைச்
சத்துச்சித் தானந்த சாக்ஷி யெனப்பாவித்
தத்துவிதா னந்தமுற லாம். 20

பன்னிரண்டு மெல்லிதழ்கள் பற்று மனாகதப்
பன்னிரண்டு காடாந்த பங்கயத்—தென்னிதய
மேவு மவனாத மெய்வடிவ பாவனையாற்
றுவுமன மோய்ந்துபோம் தான். 21

மணிபூ ரகத்தின் மலரிதழ்கள் பத்தி
லணியெழுத்து டாபாந்த மாகுங்—கனிமனாப்
போற்று மவனார் பூங்கழல் பாவிக்கக்
கூற்றுவன் வாரான் குறிதது. 22

ஆறெழுத்து வா லாந்த மாறிதழி னேடொன்றிக்
கூறும்ஸ்வா திஷ்டானங் கூடியே—மாறில்லாப்
பாவனை செய்யப் பணிந்தவனார் தர்கழல்கள்
பாவமறும் ஞானமுறும் பார். 23

மூலாதா ரத்தின் முளைநா லிதழ்க்கமல
நாலாம்வா ஸாந்த நடுவிருந்து—பாலாசக்
குண்டலியின் பந்தமறக் கும்பித் தவனார்தர்க்
கண்டமிர்த முண்டிடுவோங் காண். 24

ஹம்க்ஷ மிரண்டிதழ்சே ராக்ஞை புருவநடு
ஹம்ஸாவ தூத வருமணியை—ஹம்ஸவெனப்
பாவிக்கும் ஞானிகளே பாரோரும் விண்ணோருஞ்
சேவிக்கு முத்தரெனத் தேர். 25

ஆதார மாறின்மே லாயிரந்தே ஜோவிதழுள்
வேதாந்த சித்த விழுப்பொருளா—நாதாந்த
மோனகுரு வானவவ தூதமுக்தர் பாவனையான்
ஞானமய மாயிருப்போ நாம். 26

ஆதியந்த மில்லா வறிவே யவதூத
ஜோதியுரு வாய சுடர்க்கொழுந்தே—மேதினியிற்
பக்குவர்க்க னுக்ரகிக்கப் பாப்புமானி டத்துதித்துத்
திக்குவஸ்தி ரந்தரித்தாய் தேர்ந்து. 27

யானே யெனையறிந்து யாவுமே நானெனச்செய்
வானே யவதூத வள்ளலவர்—தானே
யுலகா யுயிரா யுலகுயிர்க்குச் சான்று
யிலகும் பிரமமென் றெண். 28

தேகநீ யல்லைத் திகழிந் தியமுமலை
யேகனீ யென்ன வியம்பியே—மோகமதை
ஞானக் கினியா னசிப்பித்தார் சித்துருவ
வானு மவதூத மன். 29

வாஸனைத்தி யாக மனோநாசத் தோடுற்ற
ஆசில் பிரமஞா னந்தன்னுன்—மாசறுஜீ
வன்முகத்தி நற்சுகமும் வந்துறு மென்றுரைத்தார்
தன்மை யவதூதர் தான். 30

அஸ்திபா திப்பிரிய நாமரூப மாமைந்தில்
அஸ்தி முதன்மூன்று மாம்பிரம — வஸ்துவென
மற்றிரண்டும் மாயையுரு வென்று ரதுநீக்கக்
கற்பித் தவதூதர் காண். 31

விண்ணாய் வளியாய் விளங்கனலாய் வெண்புனலாய்
மண்ணாய் மதியிய மானனாய் — விண்மணியாய்
பின்னமும பின்னமாய்ப் பேருருவு மல்லவாய்
மன்னுமவ தூத வருள். 32

ஒண்கைலை நாத னுலகிற் கருள்புரிவான்
சண்முகராய் வந்தார் தாணிமேற் — சண்முகவேள்
பின்னு மவதூதப் பேர்பூண்டு காசிவந்து
என்னையாட் கொண்டா ரிசைந்து. 33

தூலநா னென்ன றொலைந்ததே சூக்குமத்து
மேலு மவித்தையும்விட் டேகிற்றே — ஞாலத்
தவதூதர் வந்தென்னை யாட்கொண்ட வன்றே
சிவரூப மானேன் றெரிந்து. 34

சிவகாம சுந்தரிநின் செம்மலர்மென் பாதந்
தவமுள்ளோர் சேருந் தகைத்து — தவமில்லா
வென்னை யவதூத வீசராய் வந்தாண்டாய்க்
கென்செய்வேன் கைம்மா றிசை. 35

யாத்திரையா னின்னகண்டம் யானவதூ தாகெடு
ரோத்திரத்தால் வாக்கதீ தங்கோலேத் [த்தேன்
யானந்தாற் சித்தயாம் யான்கெடு [தே—னைத்துந்தி
மானவப ராதந்தீர்த் தாள். [த்தேனிம்முன் று 36

தேகாந்த காலத்துச் சித்தத் துறுவினைப்பே
வாகாம் பிறவி வருஞ்சீவற்—கேகாந்தஞ்
சிந்தையற நில்லென்றார் ஜென்ம மரணமற
வெந்தையவ தூத ரெனக்கு. 37

இருபிறப் பாளர்க் கெழுநாவே தெய்வந்
திருமுனிவர் நெஞ்சத்தே தெய்வம்—வருமறிவி
லற்பர்க்கு மூர்த்தி யருண்ஞானிக் கெஙகுமாய்ச்
சொற்றதவ தூதர் துணிந்து. 38

கருப்புவில்லோன் யாவரையுங் கண்விழிக்க வொட்டாச்
சுருப்புநாண்பூ வம்பாற் றொலைப்பன்—விருப்பொன்றி
லெங்களவ தூத ரிணையினெற்றிக் கண்ணினு
லங்கத்தை யன்றெரித் தார். 39

சாந்தமுள தன்மையுளார் தம்மடியார் தம்மிடத்துப்
பாந்தமுளார் சோகசம் பந்தமிலா-ராந்தாரத்து
மானந்த ரூப ரவதூத ரென்மனத்தின்
மோனந் தனையிந்தார் முன். 40

பார்வதிதன் பாகன் பரனென்கோ பாமயிலைப்
பேர்நாவுள் வைத்த பிரமனென்கோ-சீர்த்திருவை
யங்கத்துள் வைத்த வரியென்கோ வன்புருவாய்ப்
பொங்குமவ தூத புகல். 41

வாந்தி யசன மலமூத் திரமென்ன
வேந்து முலகுயிரை யெண்ணினோர்—சாந்தரா
யென்றுஞ் சுகமா யிருப்ப ரவதூதர்
பொன்று மலர்ப்பாதம் புக்கு. 42

சுயம்பிர காசபிர மேந்திரச ரஸ்வ
தியவதூத ரானநஞ் சீமா—னியம்பிய
சாந்த வுபதேசஞ் சாந்த மனத்தனாய்ச்
சாந்தமாய் நிற்கவே தான். 43

தேகநா னென்னுந் திடஞானம் போன்ஞான
மாகநா னென்ப தழிக்குமே—யாகவே
யான்மாவி லுண்டாகி லாசிக்கா தேமுக்தி
தான்பெறுமென் றாரவதூ தர். 44

முத்தியுற வெண்ணுகின்ற வுத்தமர்கா ணீரான்ம
தத்துவத்தை யெந்தையவ தூதரிடம்-பத்தியுடன்
கேட்டுச்சிந் தித்துத் தெளிந்து கிருபையுறிற்
கூட்டுமுமை முத்தியினிற் கொண்டு. 45

துவந்துவங்க ணீங்கித் துரியாதீ தத்து
விமற்சரரா மானந்த வீட்டோ—ரவதூதர்
பாதகம லங்கள் பரிந்தரிச் சிக்குமவர்
பாதகம லங்களறும் பார். 46

பேதமொட பேதமற்றுப் பேசுபுண்ய பாபமற்று
ஓதுமாயா மோக மொழியச்சந்—தேகவிர்த்தி
வேதகுண தீதமெய்ம் மார்க்கத் தவதூதர்க்
கேதுவிது யேதுநிஷே தம். 47

உடலுயிரை யானெனதென் றுன்னு மதுவே
யடாத்தி யாசமென்ப ரான்றோர்—விடவேண்டு
மான்மநிஷ்டை யாலென் றவதூதர் போதித்தார்
வான்போற்றப் பெற்றோங்கும் மன். 48

புத்தி விருத்திப் புகல்சாக்ஷி யாந்தன்னை
மெத்தவறிந் தான்மாவின் வேறாகுஞ்—சித்தலாப்
பொய்ப்பொருளி லான்மமதி போக்கென் றவதூதர்
மெய்ப்பொருணீ யென்றார் விளித்து. 49

எவ்வெப் பொருளினைக்கொண் டேகுமோ சித்தமது
வவ்வப் பொருளி னசத்தாதி—செவ்வையா
யூகித்து நேதிகளோந் தோங்கான்ம தத்துவமே
யாகி லவதூத ராம். 50

லோக நெறிநீங்கி நீங்கியே நானெறியுந்
தேக நெறியும்விட் டேகியே---சோகமற
அத்தியா சத்தை யகற்றென் றுரைசெய்தார்
நித்தரவ தூத நெறி. 51

அத்துவித சித்த மறையுந் திரிவித
சுத்த பரிச்சேத சூனிய—வத்துமற்
றெம்மநத்துஞ் சித்தியா தென்ற வவதூதர்
மெய்ம்மொழியே வேத மொழி. 52

சேறி னிடத்துச் சிறுபிள்ளைப் பூச்சிபோற்
கூறு முலகோடு கூடிநின்றும்—மாறின்றி
நிஷ்களங்க மாகவே நிற்ப ரவதூதர்
புஷ்கரநீர் தாமரையிற் போல். 53

கேசிதா காசங் கிளர்மனமே காக்கிரமாய்ச்
சேஷித் ததனுருவைச் சேர்தலைக்—கேசரி
முத்திரை யென்று மொழிந்தா ரவதூதர்
சித்தத்தா னந்தமுறத் தேர்ந்து 54

சாக்கந் கட்டுடையாய் காவா திருந்தக்கா
லார்க்குப் பெரும்பார மாகுமோ—பார்க்குள்
அவதூதக் கோலத் தவதரித்த வீச
ப்வந்தீ ரருட்கண்ணுற் பார். 55

தாபத் திரயத் தழலால் வெதுப்புண்டு
ஆபத்தை யெல்லா மடைந்தேன்றன்—பாபத்தைப்
போக்கிப் புனிதஞ்செய் போதரவ தூதர்தாள்
வாக்குமன மெய்யே யழுத்து. 56

அந்தர்யாம் யாதி யருஞ்சிற் றெறும்பீறு
யெந்தச்சை தன்யத் திருப்பினுற்—சந்ததமுஞ்
சித்ரூப மானந்த மாகச் சிறந்தனவோ
தத்ரூப மேயவதூ தர். 57

ஆயுங்கான் ஞானிக் கழகாந் துறவறவே
தாயுங் குழந்தைபோற் றற்காக்கும்—வீயுமிந்த
வில்லறத்தி லென்று மிருப்ப திடரொன்றே
சொல்லுமவ தூதர் துணிந்து. 58

அன்னைதந்தை தெய்வ மருளாசா னின்னோர்கண்
முன்னைப் பணியு முறையினு—ரென்னினுமே
அஞ்ஞான நீக்கி யவதூத ராய்நிற்கும்
மெய்ஞ்ஞானி யாமாசான் மேல். 59

தேசைப் பெருக்குந் திகழ்ஞானத் தைக்கொடுக்கு
மாசை யறுக்கு மழகாக்கும்— வீசுகதிர்ச்
சூரியன்போற் றேகஞ் சுடரா மவதூத
வாரிய வாக்கமுதத் தால். 60

பொறிகலங்கிப் புத்தி கலங்கிப் புலன்றன்
நெறிகலங்கி நிற்கவு நேர்ந்த—வறிவழிந்து
கூடுவிட்டுப் போமுன் னவதூதக் கோமானைப்
பாடுபட்டுச் சேர்வோம் பரிந்து. 61

பஞ்சேந் திரியப் பலவிஷ யங்களிலே
நெஞ்ச மலைந்து நிலையின்றிச்—சஞ்சலித்துக்
கஷ்டப் படாதென்னைக் காத்த பாப்பிரம
நிஷ்ட வவதூத நீ. 62

கட்டுப் படாதோர் கணத்திற் பலபொருளை
யெட்டுப்பத் துக்கோடி யாவெண் ணுந்—துட்டமனந்
தன்னி லவதூதர் தாட்டா மரைதன்ன
மின்னி லடங்கும் விரைந்து. 63

ஒன்று மனத்திருகா லோய்ந்துபோ மும்மலங்க
ளொன்றுநால் வேத மியம்புமே—வென்றமன
வஞ்சுதலைக் காறுதலை யாகு மவதூதர்
வஞ்சமிலே மைக்கெட்டு வார். 64

என்போன்ற விப்பாரி னேழைகளை யீடேற்றப்
பொன்போன்ற மேனி புனைந்தருளு—நன்ஞான
வாரிதியை யெங்க ளவதூத வள்ளலையே
சேரிதய மேநீ சிறக்க. 65

சிதாகாசந் தன்னிலே சித்தம் லயித்துச்
சதாகாலந் தானாய்த் தனித்து—வுதாசீன
பார்வையாய் நிற்கப் பகர்ந்த தவதூதர்
நேர்மையா மிந்த நிலை. 66

திரணமுஞ் சேருமே சேர்ந்திருக்குந் தேகந்
திரணத்தின் கீழாய் ஜெகத்தை—பொருளலவென்
றுன்னுமவ தூத ருபய திருவடிக
ளென்னுடைய நெஞ்சத்த தே. 67

என்னெஞ் சிருடீர வெற்ககண்ட போதத்தை
வன்னஞ் சுகந்த மறைக்காடர்—நன்னயமா
யாசிரிய ராக வவதூதக் கோலமொடு
மாசின்றிப் போதித்தார் வந்து. 68

அற்ப ரிடத்தே யருத்தத்திற் காய்ச்சென்று
நற்சொற்க ளாலே நயந்துரைத்து—நிற்காது
சுத்த மனமேநீ தோன்ற லவதூத
சித்தர்பா தத்தேபோய் நில். 69

அஞ்ஞான மில்லாதா லாரணங்க டாங்கற்று
மெய்ஞ்ஞான முண்டாக வேண்டேன்யா-னெஞ்ஞான்
சந்தேக மில்லாதாற் றன்மனனம் வேண்டுகிலே [றுஞ்
னெந்தையவ தூதரா லே. 70

கர்த்தவ்ய மெல்லாங் கழன்றதவ தூதர்சொ
லர்த்த முணர்ந்தநா ளன்றேமே—விர்த்திகளுந்
தோன்றா திருக்கச் சுகாதீத மாநிலையி
னொன்றா யிருக்கின்றே மென்று. 71

ஆகாய பட்டினம்போ லாய வுலகைநம்பி
யாகா யமனுக்கே யாளாகிப்—போகாமற்
றன்னையெனக் கீந்தாண்ட சாமி யவதூத
மன்னவா வென்னைக்கா வா. 72

முப்பேத மில்லாது மூன்றுபரிச் சேதமின்றி
யெப்போது மெல்லாமு மெங்குமா—யொப்பிகந்து
தானாக நிற்குஞ் சதுரவ தூதரெனைத்
தானாகச் செய்தார் சமர்த்து. 73

சிவசிவ வென்று திருநீ றெடுத்துச்
சிவசிவ வென்று ஜெபித்துச்—சிவசிவவென்
றோதி யவதூத வுண்மைசிவ மந்திரத்தாற்
பூதி யணிவோம் புகன்று 74

சூரியன் முன்னிலையிற் றொல்சீவ ரெல்லாரும்
பாரில் விவகாரம் பண்ணுவபோ—னேரில்லாச்
சத்துச்சித் தானந்த சாக்ஷியவ தூதர்முன்
சித்தசித்தாம் யாவுமெனத் தேர். 75

திருவே யவதூதத் தேவேசன் ஞான
குருவே குணங்கணிறை குன்றே—தருவேநீ
யஞ்ஞான வல்லே யறுத்தெனக் கானந்த
மெய்ஞ்ஞான மெய்ரூப மீ. 76

உலகமென்ப தூண்டென் றொருக்காலுந் தோன்றா
திலகுஞ் சுகவடிவ மெய்தி—புலேவி
னிருவிகற்ப நிஷ்டை நிலேயினிற்க வெற்குப்
பொருவிலவ தூத புகல். 77

ஐய ரவதூத ரார்க்குமப யங்கொடுக்குங்
கையர் கருணு கரக்கடவுண்—மெய்யர்
வடவாலின் றென்பாலின் மாமுனிவர்க் கீந்த
திடஞான மெற்கீந்தார் சீர். 78

இன்றெனக்குத் தோன்றி யிசயத் திருள்கடிந்து
குன்ருப் பதமீந்த கொற்றவா—வென்றி
யவதூதக் கோல மடியேற்கு நல்கிப்
பவந்தீர்த் தெனையாள் பரிந்து. 79

வாளுதி பூதங்கள் கெட்டு மனுதிகெட்டுத்
தானுக நிற்குந் தாயறிதல்—வேகாளுக
வந்த வவதூதர் வாக்கினு லல்லாம
லெந்த விதத்தாலு மில். 80

வேதமுத னூல்களெலாம் விண்ணோரும் போற்றுகின்
கோதன் னிஜவடிவிற் கூட்டியே-தீதகற்றி [ற
யஞ்ஞான நீக்கி யருளுமவ தூதரையே
யெஞ்ஞான்றும் போற்றுவேன் யான். 81

பாலரைப் போன்ஞானி பாரிற் சரிப்பனெனச்
சிலர்நூற் சொல்லுந் திறமதனை—ஞாலத்தோர்
காண வவதூதக் காக்ஷியளி பொற்பாதம்
பூணிற் சிரமே புனை. 82

காமாதி துட்டவி காரமஞ் யாசமாய்ப்
போமாறு செய்த புனிதராம்—பூமானந்
தச்சுடரை ஞான வவதூத தற்பரரை
யிச்சித்து நெஞ்சே யிரு. 83

அவதூத வேட மடைந்துசுகம் வேண்டிற்
றவந்தானம் யோகாதி தாரா—புவிமீதி
லெல்லாமுந் தானா யிடையி னுடையின்றிச்
செல்லுமவ தூதர்பாற் செல். 84

பார்க்கப் பவம்போம் பரிசிக்க ஞானமுண்டாஞ்
சேர்க்கத் திருத்தாள் சிவமாவாய்—ஆர்க்குஞ்
சுருதிப் பிரமாணந் தோன்றலவ தூதர்
பருதி யிருள்போலப் பார். 85

வாருங்கள் வையகத்தீர் வந்துங் குறையெல்லாந்
தீருங்க ளென்றேதான் செப்பல்போ—னேருங்கள்
பற்றின்றிச் சஞ்சாரம் பண்ணு மவதூதர்
வெற்றி விரைத்தாண் மலர். 86

சந்திர னைக்கண்டு தானுனந் தத்திறற்
கொந்தளிக்கும் வாரியிற் கூத்தாடு—மிந்தன்ன
போத மவதூதர் பொற்பாதங் கண்டென்றன்
சீத மனமே தெளிந்து. 87

சிற்சபையி லாடுஞ் சிதம்பர தேவாநீ
பொற்சபையா யென்னெஞ்சம் புக்கிருந்து-எற்கமலஞ்
செய்ப வவதூதத் தேசிகராய் வந்ததனு
லுய்ந்தேன்மெய்ஞ் ஞான முற. 88

நித்திய சுத்த நிஜானந்த னீயென்னச்
சித்தாவ தூதர் தெரிவித்தார்—முக்தி
திசையிலுங் காணேன் றெளியாத பெத்த
திசையிலுங் காணேன் றிறம். 89

ஐம்புல வேட ரகல்வலை யிற்சிக்கி
வெம்பிறவிப் பட்டு வெதும்புமென்—ஜம்பமற
வுண்மை யுணர்வை யுரைத்தாண்ட வுத்தமரெம்
மண்ணா லவதூத ராம். 90

எங்கெங்குந் தானா யிருப்பதனைக் காணாம
லங்கிங்கு மோடி யலைந்தேற்குக்—கொங்குமலர்த்
தாரா ரவதூதர் தந்தார் வறும்பிறவி
வாரா திருக்க மருந்து. 91

எத்தனையோ ஜென்மத்து யான்செய்த நற்றவங்க
ளத்தனையு மொன்றுசேர்ந் தாட்கொள்ளப்—புத்தமுதா
வந்த தவதூத வள்ளலா யோர்வடிவிற் [ய்
றந்ததா னந்தந் தனை. 92

வானாகி மண்ணாகி மற்றுமுள்ள பூதங்க
டானாகி யிந்திரவி தானாகிக்—கோனாகி
நானாகி யெந்தையாய் நாற்றிக்கு மேல்கீழுந்
தானா மவதூதர் தாள். 93

வர்னத்தி னுள்ளே மனந்தன்னை வையென்றார்
வானத்தை யும்மனத்தில் வையென்றார்-மோனத்தை
யிவ்வித யார்க்கத்தா லெய்த வவதூதர்
செவ்விதாச் சொன்ன திது. 94

காலன் றனையுதைத்தார் காமன் றனையெரித்தார்
பாலன் றனக்கமுது பாலித்தார்—மாலன்பாற்
கண்ணளி க்கச்சக் கரமளித் தார்கருணைக்
கண்ணா ரவதூதர் காண். 95

மாசா வுடற்சலிப்பும் வல்வினையேன் காற்சலிப்பும்
வேதாவின் கைச்சலிப்பும் விட்டதே—நாதா
வவதூதத் தேவே யடியேனைக் காசிப்
புலியிற் றடுத்தாண்ட போது. 96

நேருமோ ஸத்ஸங்க நீங்குமோ சித்தமலஞ்
சேருமோ மெய்ஞ்ஞானம் ஜென்மநோய்தீருமோ
மெய்யா விமலா வவதூத சின்முத்திரைக்
கையா வெனையாளாக் கால். 97

வேதம் மணக்குந் திருவாக்கில் வேதாந்த
போதம் மணக்கும் புகழ்மனத்து—ஞாத
னருண் மணக்கு நன்றேக் கவதூத ரங்கை
திருமணக்கும் வெண்ணீற்றின் சீர். 98

என்ன செதுதன்னை யெய்தவே யெண்ணினரோ
வன்ன ரதனை யடைகுவார்—மன்ன
ரவதூத வண்ண லருட்கண் ணனுகத்
தவஞானி தானான தால். 99

சேந்தமங்க லத்துக் குகையிற் றெரிசிக்கப்
போந்தார் தவங்கள் புரிந்தார்கா—ணேந்தரத்தி
மோர்கா லவதூத வுத்தம வந்தணரை
யோர்கா லுறுவா ருணர்வு. 100

காசித் தலத்திற் கடவு ளவதூதர்
நேசித்து ஞான நிலைதந்தார்—வாசித்த
வேதமே தாந்தமெலா மெய்யர் திருக்கமல
பாதத்தைக் காட்டவே பார். 101

பூமாலை தன்னைப் புனைவரவ தூதவெண்
பாமாலை யாலென் பயனென்னிற்—பூமாலை
வாடித் துறக்கும் மணமிதனால் ஞானமலி
சேடித் திருக்குந் தினம். 102

சிவமாலே வேதா திருமூர்த்தி யொன்றாந்
தவமுய லத்திரிதன் றூத—வவதூத
மன்னுமே வாமுக்தா மாதக்தா நின்னல்லான்
மன்னுமே யென்றன் மதி. 103

பிர்மாம் புதியிற் பிறந்து சதாசிவப்
பிர்மேந்த்ரர் கையிற் பிறங்கியும்—நிர்மலனு
வென்னையே செய்ய வெழுந்த வவதூத
மன்னையே நெஞ்சே மதி. 104

கார்நீர்பார் பெய்யக் கருதாக்கைம் மாறுபோற்
சேர்வார்யார் தம்மையச் செம்மனத்தோர்க்-கோர்சீர்சா
[ல்
சுத்தான்ம போதஞ்சேர் சூழ்ச்சியவ தூதர்செய்வார்
பெத்தான்மா முக்தி பெற. 105

எத்தனைபேர் பக்த ரிருக்கவென் புன்மொழிக
ளத்தனைக்குஞ் சித்த மருள்வரோ—முத்தனைய
னென்னின் மழலை யிளமொழி கொள்ளுவார்
தன்னி லவதூதர் தான். 106

மனமொன்று நாடாது வாக்கொன்றும் பேசா
தினமா முடலொன் றியற்ற—தனுதினமுஞ்
சும்மா விருந்து சுகானுபவ மெய்தென்று
ரெம்மா னவதூத ரே. 107

என்னிலே தோன்றிய மென்னி லிருந்தும்பி
னென்னிலே யேயொடுங்கு மிச்சக—மென்னலாற்
கைவல்லி யோபநிஷத் காட்டுநான் பிர்மமெனத்
தைவவவ தூதருந் தான். 108

வாழி யவதூதர் மெய்ஞ்ஞான வாக்கியங்கள்
வாழி வதன மலர்க்கரங்கள்—வாழி
யரும்பிறவி நீக்கியெனக் கானந்தந் தந்த
குருவருள் கண்காண் குறி.

ஸ்ரீ அவதூத வெண்பாமாலை
முற்றும்

---

ஸ்ரீமான் ஸ்வாமி
நிஜானந்த பிர்மேந்த்ர
ஸரஸ்வதி

உ

சிவமயம்.

# ஸ்ரீ அவதூத நவமணிமாலை.



## காப்பு.

முத்தமிழே மும்மதமா மூச்சுடரே முக்கண்ணு
மத்தன் கணேச னருள்செய்க—நித்த
மவதூத ரம்பொன் னடிக்கே யணிய
நவமணி மாலையை நான்.

## நூல்.

பூவிற்கழகு சிவபூஜை பினற் பொலிவுறுதல்
காவிற்கழகு தளிர்மலர்தென்றல் கலைமயிலே
கோவிற்கழகு மனுநீதி குன்றச் செங்கோல் செலுத்த
னாவிற்கழகு மவதூதர் சீர்த்தி நவின்றிடலே. 1

நாவால் விராகம் விராகமென்றெங்கு நவின்றதலா
னேர்வாலதனை யடைந்திலமுள்ள நிகழ்வுறவே
கோவான வாதிசையாடை யுடுத்த குருமணியே
காவா கடாக்ஷித் தவதூத நாயேன் கதியுறவே. 2

உறவு சிவன்ற மரல்லா னமக்கு முதவுவதோ
துறவு தேகாதி யபிமான நீங்கத் துலங்குவதே
நறவு துளுப்பு மலர்மாலை வேணி நமதிறைவ
ரறவ ரவதூத ரம்பொ னடி நமை யாளுவதே. 3

ஆண்டா னடிமை யெனுந்திறமுற்று மறவுமுனம்
பூண்டாரிருந்த நிலையது ஞாலுட் புதைகருத்தும்
மாண்டார் சனகாதி யர்க்கனல்காட்டு மறைமுடிவுந்
தூண்டாமணிவிளக் கெந்தை யவதூதர் சொற்றனரே 4

சொல்லுமண் ணாதி ஜீவாந்தமெட் டீசன் சொரூபமென
வெல்லுஞ் சுருதியெனி லீசனம்மிலும் வேறெவணங்
கல்லும்மிதக்குங் கவிசொல் லரசினற் கட்டுரையும்
நல்லவதூதர் சொல்லு மதனையே நாடுமினே 5

நாடுங்கா னம்மாற் சிருஷ்டிமுதல நடப்பதில்லைக்
கூடுமதெவ்வண மென்னிற் பரமார்த்தக் கூற்றதன்றி
நேடுநம் முன்னிருடியர் செய்த நிலையுணர்த்தும்
வீடுநம்பந்த மவதூதத் தேவை விரும்புவமே. 6

வஞ்ச நமன்றமர் வாதனைப் பட்டு மதிமயங்கித்
தஞ்சமொன்றின்றிச் சலிப்புறுவண்ணந் தமியன்முனங்
கஞ்சமென்பூவைக் கடினமாக் காட்டுன் கழலிணைதந்
தஞ்சலென்றோர் சொல் லவதூத தந்துலகாளுவையே 7

உலகர்க்குறுநடை சார்ந்து மவர்த முறவுகொண்டு
கலகக்குணைந்து கருமமேசெய்து கலங்குவதும்
புலகுக் குரங்களொருபாங்கர் நின்று புரிதுயரும்
விலகக்குரவ வவதூத வந்து விளங்குவையே. 8

விளங்குமுந் நூலு நதி மதி சூலம் விடவரவுந்
துளங்கு முழையுரி பார்ப்பதிமைந்தர்த் தொகுத்துமுள்
[ளிற்
களங்கமின் மானிடந் தாங்கியவதூதக் காக்ஷியொடு
முளங்குளிர் வித்தறி வாய்நின் றருள்செய் துவந்தன
[வே. 9

ஸ்ரீ அவதூத நவமணிமாலை முற்றும்.

---



உ

# அணியமங்கலம் ஸ்ரீ மழுவேந்தி விநாயகர் இரட்டைமணிமாலை.



## காப்பு.

பொன்னணிய மங்கலத்திற் பூங்கோயில் கொண்டாளு
மன்னர் மழுவேந்தி மாமுகத்துத்—துன்னுமதி
யையர்க் கிரட்டைமணி மாலை யணியவைங்
கையர் திருப்பாதங் காப்பு.

## நூல்.

மழுவேந்தி மாவதன மாந்தரொடு தேவர்
குழுவேந்து காய்கனிபூக் கொண்டு—தொழும்வேந்தே
மாதங்க நிற்போற்று மாண்புள்ள யாவர்க்கும்
மாதங்கச் செய்வாய் மதித்து. 1

மதித்துன் றிருக்கழல் போற்று மடியவர் வல்வினையை
மிதித்துத் தொலைத்து மழுவேந்தி மாற்றிடு வேண்டும்
கதித்துக் களித்து மளித்திடு பக்தர்களை கணனீ [வரம்
துதித்து மனத்தி லிருத்தி நிலைக்கத் துணைசெய்வையே

வையத்தி லுன்போன் மழுவேந்தி விக்கினந்தீர்க்
கைய வொருவரா லாகுமோ—மையலறு
நெஞ்சர்க் கெளியா யரியாய் நினையார்க்குத்
தஞ்ச மெனக்குன் சரண். 3

சரண்புகு மன்பர்தமை யென்றுங்காக்குந் தகைமையுள
திரண்மணிமுத்து வைடூரிய ரத்னந்—திகழ்புயத்து
வருண்மதமுற்று மழுவேந்தியானை யரண்மகனைத்
தெருண்மனத்தோடு நினைப்பார்க்கரிய செகத்திலையே.

ஜெகத்துப் பரலோக ஜீவர்க ளெல்லா 4
மகப்புறத்து நிற்போற்றி யன்பாய்—மகத்துவங்கள்
பெற்றார் மழுவேந்திப் பிள்ளையரே நீரெனக்குன்
பொற்றா டுணையே புரி. 5

புரியட்டகாயமென் னுள்ளும் புறமும் புரந்தருளுந்
தெரியட்ட மங்கல மூர்த்தியுமாகத்—திகழுகின்ற
கரியட்டகமும் பணியு மழுவேந்திக் கண்ணுதனின்
கரியட்டமாமுக வைங்கரத்தா லெனைக்காத்திடவே 6

திடஞானி யாவென்னைச் செய்கமழு வேந்திக்
கடன்ஞான மத்த களிறே—உடன்மாண
நீங்கியா னந்தவெள்ள நீங்காதெனுள்வந்து
தேங்கித் திளைக்கநீ செய். 7

செய்யவிருபத மும்மத நால்வாய்த் திருவைங்கர
மெய்ய விநாயக வக்கிர துண்ட—விகடவிப
துய்யா னனவேக தந்தலம் போதா தாம்ரவர்ண
உய்ய மழுவேந்தி யுள்ளுகவெம்மைத் திருவுளத்தே 8

திருவுள்ளந் தானே செகமெல்லாந் தன்னுண்
மருவவே வைத்திருக்கும் மாண்பாற்—கருவிற்குள்
ஜீவன்போல் ரக்ஷிக்குஞ் செம்மன் மழு வேந்திபத
மாவன்பீக் கொள்ளாதா ரார். 9

ஆரணமாகமமெல்லாம் பதச்சிலம்பா யிருந்து
சீரணங் கேசெயு மென்னம்மை முன்பெற்ற செல்வப்
[பிள்ளை
யாரணமாதியினின்னையே போற்றி யாற்றுமெனிற்
காரணனியே மழுவேந்தி முச்சுடர்க் கண்ணுதலே 10

கண்ணிமைப்பின் முன்னோன் கணேச னுலகமெலாங்
கண்ணிமைப்பின் மாண்டுபோங் காணுதே—கண்ணி
[மைப்பி
லென்றிமையா நாட்டத்திருந்தாண் மழுவேந்தி
குன்றலின் ஞான குரு. 11

குருவாதி மூவுரு வாயிரு பாதவொரு கொம்பனை
மருவார் மலர்கொண்டு நாளுமர்ச் சித்து மனநினைக்கத்
திருவார்ந் திடுங்கல்வி ஞானமுந் தந்திடுஞ் சீர்த்திதரு
மறுவார் பிறப்பு மருவா துதிமழு வேந்தியையே [ம்
12

மழுவேந்தி யேநுந்தை மாங்கனிக்கா லோகம்
முழுவலஞ்செய் தெய்தென்ன முன்னர்த் தொழுதவ
[ரைச்
சுற்றிவந்து பெற்றபடி சுற்றுதெற் குன்பொற்றுட்
பெற்றிடச்செய் வாய்கருணைப் பேறு. 13

பேறுநலன்பர்நின் பாதத்திற் பூசித்துப் பெற்றசுதற்
கூறுசெய் தட்டுக்கொடுத்து மிளமுலைக்கோ தையரின்
வேறு பிரிந்தும் விராகாதிகளுற்று மேபெற்றனர்
கூறுமி தொன்றுமி லேன் மழுவேந்தி குறித்துக்கொ
[ளே 14

கொளல்பாத மேசிரத்திற் கும்பிட லன்பாய்
விழல்பாவ நீறாக வெந்து—பளபளனு
மின்னன் முடியானை வேட்கை யுடன்கறிக்குங்
கன்னன் மழுவேந்தி கா. 15

காப்புக்கு முன்றெய்வ நீயன்றி வேறு கடவுளுண்டோ
பூப்புக்கு லகளிப்பாய்சாலி யோடதி புஷ்டிசெய்து
கோப்புக்க ணின்றியக்குன்னையே தாமுங்குறித்தறியா
பாப்புக்குழந்தை மழுவேந்தி யெற்குன்பதம் [ர்
(பணியே 16

பணிவா ரெவர்நின்னைப் பக்தியொடு நித்தம்
பணிவா ரவரைப் பாலரும்—பணிதேவர்
பாதகா வென்னைப் பரிந்து மழுவேந்திப்
போதகா ஞானம் புக. 17

புகர்முகத் தெந்தை மழுவேந்திதாண்மலர் பூசித்தென்
சுகர்முதன் ஞானிய ரெய்தினர் பிரமசுகானுபவம்[முஞ்
பகர்வதென் னெஞ்சம் பரவைத்துரும்பிற பதைப்
[பறவே
நிகர்வதொன் றில் லாப்பிரமானந்தத் தினிலையருளே 18

அருளே திருமேனி யாகுமழுவேந்தி
யிருளே யகல்விக்கு மெந்தை—பொருளென்னி
னென்று மழியாத வின்பப் பொருணல்கும்
பொன்றும் பொருட்கென் புகல். 19

புகலான துன்னை விடவேறு சொல்லத் புவியிலுண்டோ
விகலானதென்று மிராதே யகற்று மிபானனனே
சகலாக மாதிகலையும் மழுவேந்தி தந்திடுவா
பகலாதெ னுள்ளத்தறிவூடிருந்து மருளுவையே. 20

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜ காச்சார்யவர்ய
ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச பிர்மேந்த்ர ஸாஸ்வதீ
அவதூதஸ்வாமிகள்
சிஷ்யர் நிஜானந்த பிர்மேந்த்ர ஸரஸ்வதி
யியற்றிய மழுவேந்தி விநாயகர் விரட்டை மணிமாலை.
முற்றும்.

---

குருசரணாரவிந்தாயநம:



ஓம்தத்ஸத்

ஸ்ரீ. பரமாத்மனே நம:

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாச் சார்யவர்ய
ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச பிர்மேந்திரஸரஸ்வதி
அவதூத ஸ்வாமிகள் பேரிலியற்றிய
அவதூத விரட்டை மணிமாலை.



## காப்பு.

கங்கை முடிசேர் கடவு ளவதூதர்க்
கங்கை யனலேந்தி யன்பாக—கங்கை
இரட்டைமணி மாலை யியம்பக் கணேச
ரருட்டிருப் பாதங்காப் பாம்.

## நூல்.

உலகெலாஞ் சங்கற்பத் தோற்றத்தா லுண்டா
யிலகு மவற்றை யிரக்ஷித்—தலகிலா
மெய்யர் விளையாட் டயரு மவதூதர்
செய்ய சரணைந் திரு. 1

திருவான சின்மய தேஜோமயமே திரண்டுருண்டோ
ருருவானதான வவதூதரிவந்தை யுளமகிழ்ந்தென்
குருவான வாறுமருள் செய்தவாறுங் குவலயத்திற்
கருவான வீட்டினுறையாத வாறெனைக் காத்ததுவே 2

காத்தன் மனத்தைக் கடிந்திடல் ஜென்மதுக்கம்
பார்த்தலவ தூதரைப் பாரெங்கு—நீத்ததுற்
சங்கத்தை யென்றுந தகித்தல்கா மாதிநற்
சங்கத்தைச் சார்தலே தான். 3

தானான வோர்முத றன்மாயா சக்திச் சலிப்பதனா
னானா சகபர ஜீவர்க ளாகி நடித்திடப்பின்
கோனா யவதூதக் கொற்றவ ராகிக் குருபக்தியோ
டானா விராகமெய்ஞ் ஞானம தீந்தது வானதுவே. 4

ஆன தனாலே யகிலபர பஞ்சந்தா
னானத னாலேதா னத்துவித—மான
சுருதி யதார்த்தார்த்தந் தோன்றவைத்தார் போத
குருவா மவதூதக் கோன். 5

கோன்செய்த மாயா விளையாட்டை யென்னென்று
(கூறுவன்யா
னான்செய்த தேகமு நாமரூபாதிகளொன்றுமிலார்
வான்செய்த பூதாதியாவையுஞ் செய்து மதிற்புகுந்த
நான்செய் தவத்தா லவதூத ராகவு நண்ணினரே. 6

நண்ணுஞ்செய் காரியங்க ளாதரவ னாதர்க்கென்
றெண்ணு மியற்று மிதயத்தாட்—கண்ணொளிபோ
லெங்குஞ் சுகவடிவா யேற்றந்தாழ் வில்லாது
தங்கும் பொருள்வந்து தான். 7

தானற்றுச் சாஸ்திரங்கற்பது மற்றுச் சகலப·ற்று
வானற்றுக் கேவல மற்றுமண்ணாதி மதித்தலற்று
வூனற் றுயிரற் றுறவு பகையற் றுளமுமற்று
நானற் றிருக்கவன் றேவவனாதர் நவின்றனரே. 8

நவின்றன ரோர்மொழிதா னாதரவ னாதர்
தவிர்ந்தன மாபா சகமே—குவிந்தன
சித்தப்ர விர்த்தியெலாந் தேஹோஹம் பாவம்போய்
முத்திப் பதஞ்சேர முன். 9

முன்னவா வாதி முதல்வா வரிவிதி முன்னர்வந்து
மன்னவாக் கொண்டு மலையவுந் தாமே வலியவந்து
மென்னவா முற்று மொழித்தவா நின்னருட் கென்னை
(செய்கேன்
றென்னவா தேவா வவநாதநாத சிதம்பரரே. 10

பரமுனக்கே யாக்கப் பரமுனக்கே காக்கப்
பரமுனக்கே போக்கப் பதியே—பரமுனக்கே
யல்லா தவநாத வார்க்கு மதிகாரஞ்
செல்லாது நீயல்லா தே. 11

தேவர் முனிவர் சித்தவித் யாதரர் தென்புலத்தோர்
மூவ ரிருடியர் தானவர் யாரு முறைமுறையே
மேவரு நின்பத பங்கயச் சேவை விழைந்துசெய்வா
ராவலி னூடே யடியே னவதூத வாண்டுகொள்ளே 12

கொள்ளிற் றடுத்தாண்டு கொற்றவா நாயேனை
யெள்ளற் குரியேனீ டேறுவேன்—றள்ளிற்
பிழையே னவதூதப் பெம்மானே ஞானந்
தழைத்தோங் கருள்செய்வாய் தான் 13

தான்மிக்க சாஸ்திரங் கற்று சப்தார்த்த சதுரர்களாய்
நான்மிக்க னென்பவரெங்கெங்குந் தாமுண்டு நாடிடுங்
[கா
ஞான்மிக்கதேகம் வெறுத்தான்ம நிஷ்டையுமும்மி
[னன்றி
நான்மிக் கவதூத கண்டிலன் கேட்டிலன் ஞாலத்தே.
14

தேடிய நின்பாத சேவைக்குப் பாத்திரனாய்க்
கூடியே நிற்குங் குணமருள்வாய்—பாடிய
கம்பல வஸாவதரர்க் கர்ணாபூட ணஞ்செய்த
நம்ப வவதூத நான் 15

நான்பெற்ற ஜென்மமுந் துக்கமுங் கூறவு நாவுமிலை
யென்பெற்றை பின் ஜென்ம மீச னளித்தன னெற்றுக்
[கெனின்
வான்பெற்ற தேவரும் பெற்றறி யாத மலர்ப்பதநான்
றான்பெற்றிடவவ தூதர் செயச்சரீ தார்த்தமிதே. 16

தேர்ந்துலகம்பொய்யென்னத்தெள்ளிய மெய்ஞ்ஞானஞ்
சார்ந்தனு தானென தன்னியர்கள்—பேர்ந்து
முலகியலை யுன்னு ருறுதியிதிற் சாக்ஷி
யிலகு மவதூத ரெண். 17

எண்ணிலி காலங் கடைகலோகாதி யியற்கையன்றி
நண்ணிலி நாதனடியிணை நாடு நலன்பரையு
நண்ணிலி நற்கதி யேற்றனி னெஞ்சே நமதிரண்டு
கண்ணிலி லங்கு மணியாமவதூதர் காண்கதியே. 18

கதியென்னல் செல்லலாங் கண்டிதமில் லேற்குக்
கதியதே தானுதல் கண்டோங்—கதியிதென்றூர்
வேதாதியாஞ்சர்வ சாஸ்திர மெய்மைதேர்
நாத ரவதூதர் நாடு. 19

நாட்ட முற்றேயிரு நம்மவதூதர் நளினபதங்
கூட்ட முற்றேயுள நல்வினைதீவினை கூடுவிட்டே
யோட்ட முற்றேவிடவுள்ளே யானந்த வொளிபிறங்கத்
தேட்டே முற்றேயருட்சத்தியு நின்றுதிளைத்திடுமே.
20

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாச்சார்யவர்ய
ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச பிர்மேந்திர ஸரஸ்வதி
அவதூதஸ்வாமிகள் பேரில்
சிஷ்யர் நிஜானந்த பிர்மேந்திர ஸரஸ்வதி
யியற்றிய அவதூத விரட்டை மணிமாலை.
முற்றும்.

